31st October 1958]

**Sri M. C. MUTHUKUMARASWAMY**: ஸார், இந்தக் கல்லூரிகளில் சேருவதற்கு மனுப் போட்ட ஹரிஜன மாணவ மாணவிகளுடைய மனுக்களெல்லாம் அங்கீகரிக்கப்பட்டனவா? அங்கீகரிக்கப்படாத மனுக்கள் எத்தனை என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU**: எல்லாம்தான் என்று நினைக்கிறேன்.

*Industrial Co-operative for Harijans*

* 737 Q.—**Sri K. B. S. MANI (on behalf of Sri P. G. Manickam)**: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்திலே ஹரிஜனங்களுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் 40 கூட்டுறவு தொழிற்சாலைகளும் எந்தெந்த இடங்களிலே இருக்கின்றன?

(ஆ) இத் தொழிற்சாலைகளிலே என்னென்ன தொழில்கள் செய்யப்படுகின்றன?

(இ) ஒவ்வொரு கூட்டுறவு தொழிற்சாலையிலும் எத்தனை ஹரிஜனங்கள் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள்?

(ஈ) ஒவ்வொரு கூட்டுறவு தொழிற்சாலையிலும் உள்ள மூலதனம் எவ்வளவு?

**The Hon. Sri P. KAKKAN**: A statement [a] is placed on the table of the House.

**Sri S. M. ANNAMALAI**: ஸார், இங்கு கொடுக்கப் பட்டிருக்கிற அறிக்கையில், வட ஆற்காடு மாவட்டத்தில் ஆனந்தம் சோப் பாக்டரி ஒன்று ஒதுக்கியிருப்பதாகவும், அதில் மெம்பர்கள் 28 பேர்கள் என்றும், ஷேர் கேபிடல் ஒன்றுமேயில்லையென்றும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஷேர் கேபிடலே இல்லாமல் எந்த இடத்தில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்வார்களா?

**The Hon. Sri P. KAKKAN**: கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி கேட்டால் சொல்ல முடியும்.

**Sri M. C. MUTHUKUMARASWAMY**: ஸார், கொடுத்திருக்கிற புள்ளி விவரப்படி தஞ்சை ஜில்லாவில் கூட்டுறவுத் தொழில் அதிகமில்லை என்று தெரிகிறது. தஞ்சை ஜில்லாவில் வசிக்கின்ற ஹரிஜன மக்கள் வருஷத்தில் ஏறத்தாழ 5 மாதங்கள்தான் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். மற்ற மாதங்களில் வேலை ஒன்றுமில்லாமல் இருக்கிறார்கள். ஆகையால் தஞ்சை ஜில்லாவில் அதிகமாக கூட்டுறவுத் தொழிற்சாலைகளை ஆரம்பிக்க அரசாங்கம் ஏதாவது துரித நடவடிக்கை எடுக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN**: இந்த கூட்டுறவு சொஸைடிகள் கிராம மக்களால் ஏற்படுத்தப்படுகிறது. கனம் அங்கத்தினர் அக்கறை எடுத்து அந்தப் பகுதியில் சொஸைடிகள் ஆரம்பிக்க முயற்சிகள் செய்வாரானால், அரசாங்கம் வேண்டிய உதவியளிக்கும்.

**Sri S. NAGARAJA MONIGAR**: இந்த சொஸைடிகளில் இதர ஜாதியினரும் சேர்ந்து வேலை செய்ய அனுமதிக்கப்படுமா?

**The Hon. Sri P. KAKKAN**: பின் தங்கிய மக்கள் கூட அங்கத்தினர்களாக இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

---

[a] Printed as Appendix III on pages 269-270 infra.

[31st October 1958

**SRI V. K. KOTHANDARAMAN**: ஆனந்தம் சோப் பாக்டரி, குடியாத்தத்தில் ஆரம்பித்து இப்போது மூடு விழா கூட நடத்தப்பட்டிருப்பது சர்க்காருக்குத் தெரியுமா? சர்க்கார் கொடுத்திருக்கும் பணத்தை திருப்பிப் பெற என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கின்றன ?

**THE HON. SRI P. KAKKAN**: இதனுடைய நிலைமை எனக்குத் தெரியாது. ஒன்றை வைத்துக் கொண்டு பிரமாதப் படுத்தக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்.

### *Emerald Dam in the Kundah Project*

* 738 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the area acquired for Emerald Dam in the Kundah Project; and

(*b*) the rate at which the Red Hill Estate was proposed to be acquired?

THE HON. SRI V. RAMAIAH: (*a*) Six acres of land have so far been acquired.

(*b*) Does not arise, as lands in the Red Hill Estate have not so far been acquired or proposed to be acquired for the Project.

**SRI K. SATTANATHA KARAYALAR**: சபாநாயகர் அவர்களே, குந்தா திட்டத்தின் கீழ் வரக் கூடிய நிலங்களை ஆர்ஜிதம் செய்து எடுத்துக் கொள்வதிலே அந்த நிலங்களுக்கு கொடுக்க உத்தேசிக்கப்பட்டிருக்கும் விலை சரியானதல்ல என்று சொல்லப்படுவது சர்க்காருக்குத் தெரியுமா ? அது விஷயமாக விசாரிக்க நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**THE HON. SRI V. RAMAIAH**: குந்தா திட்டத்திற்கு வேண்டிய நிலமெல்லாம் லேண்ட் அக்விஷிஷன் ஆக்ட் முறைப்படித்தான் வாங்கப் பட்டு வருகிறது.

SRI K. VINAYAKAM: While acquiring lands for the Emerald Dam, is it a fact that the officer entrusted with the work has put the value of the land at a higher rate when compared with the prevalent rates in the neighbourhood and that he has included also the value of the small plants there at present, by taking into account their yield after 40 years? If so, will the Government make an enquiry into the matter and rectify the irregularity?

THE HON. SRI V. RAMAIAH: Sir, the hon. Member's question contains so many assumptions. I have already stated that the whole acquisition is carried on under the Land Acquisition Act. I do not think there will be any room for such serious irregularities in the matter of acquisition.

**SRI T. K. SUBBIAH**: ஸார், குந்தா திட்டத்திற்கு நிலங்களை ஆர்ஜிதம் செய்வதற்கு முன்பாக 50 சத விகிதம் முதலீட்டிலே அட்வான்ஸாகப் பணம் கொடுக்கப்படுகிறதாகத் தெரிகிறது. இது உண்மையா ?

**THE HON. SRI V. RAMAIAH**: நிலத்திற்கு 50 சதவீதம் முன் கூட்டிக் கொடுப்பதில்லை. ஆனால் அங்கு இருக்கக் கூடிய பயிர்களுக்கு காம்பென்ஸேஷன் என்ற முறையிலே, அங்கு இருக்கக் கூடிய சிறு விவசாயிகள் நீண்ட காலமாக பாதிக்கப்பட்டிருப்பதால் அவர்களுக்கு உடனடியாக நிவாரணம் கொடுக்க 75 சதவீதம் வரையில் மதிப்பிட்டு